



திருச்சிற்றம்பலம்.

# சிறப்புப்பாயிரம்.

இஃது

திருக்கைலாயபரம்பரைத்

திருவாவடுதுறை ஆதீனத்து

அடியார்க்குழாத்தொருவரும்

இந்நூலாசிரியரிடத்தில்

கல்விபயின்றவருமாகிய

## ஆறுமுகச்சுவாமிகள்

இயற்றிய

அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

சீர்பூத்த பாலாற்றின் புனல்பரந்து காலாற்றிற் சேறலாலே, பார்பூத்த குடிதழைப்பப் பலவளனு மாங்காங்குப் பரவாக்கிக்,—கூர்பூத்த வறிவான்மிக் கோர்பலரைத் தழுவியெளவை கூறுங் கூற்றை, நார்பூத்த நாடொறும்பார் நிறுவிவருந் தொண்டைவள நாட்டின்மாதோ. (௧)

மன்னியசீர் மறையொலியுந் தமிழ்வேத மறையொலியும் வயங்கு சீர்த்தி, துன்னியவா சகவொலியுந் தொண்டர்கள் செயயரவொலியுந் துவன்றி யெங்கு, முன்னியமற் றவர்க்கு வேளாண்குலத்தோ ருபகரிக்கு மொலியு மேன்மேன், மின்னியகா லந்தொறும்விண் ணுடுசெவி டுறச்செய்குன்றை வியனூர் தன்னில். (௨)

நிலந்தழைப்ப வெண்ணீற்று நெறிதழைப்ப வஞ்செழுத்து நிலவி மேன்மேல், வலந்தழைப்ப வுயர்சைவம் வலிதழைப்ப மறுசமையம் வறப்பத்தொண்டர் புலந்தழைப்ப வடியேம்விண் டலந்தழைப்ப நலந்தழைப்பப் பொலிவேளாளர், குலந்தழைப்பச் சேவையர்கள் குடிதழைப்பத் தமிழ்தழைப்பக் குறிப்பாருய்ய. (௩)

உலகுய்யத் திருத்தில்லை நடநவில்வார் திருவருளா லொருவர்வந்து, கலைபுகழ்ப் பாலறா வாயர்முனந் தோன்றியருட் காரணார்த்தம், விலகிலருண் மொழித்தேவ னெனும்பிள்ளைத் திருநாமம் விளங்கிப் பின்பு, சுலவுசேக் கிழார்மரபு விளக்க விற்சேக் கிழா ரெனும்பேர் துலங்கப் பூண்டு. (௪)

காற்றுபகை யனபாய னமாத்தியரா யதின்முதன்மை கதிர்ப்பப் பெற்றுத், தோற்றுபுறச் சமயமெலா மொருங்கவிய வென்றருளித் தொழுவார்க் கன்பு, தேற்றுதில்லைநடரா சர் முதலருளத் திருத்தொண்டர் திருப்புராணம், மாற்றுமல மருந்தெனவாய் மலர்ந்தருளும் பெரும்புகழார் மலர்ப்பூந் தாளில். (௫)

தேக்குபுகழ்ச் சோணாட்டிற் றிரிசிரா மலையின்மிகு திரு வமோங்குந், றாக்குபுகழ் வேளாளர் குலாம்புதியிற் சிதம்பர வே•லங்கப் பன்னு, னாக்குபுக ழெனைத்தோன்றிப் பலகலை யுமொருங்கேயாய்த் தான்றோர் பல்லோர், வீக்குபுகழ்பரந்த கைலாயபரம் பரையாகி விளங்காநின்ற. (௬)

எங்கடுறை சைவமடத்தம் பலவாண தேவனடியினி னருட்டத், துங்கமுடி வாய்ந்தசிவ ஞானகலை யகங்கைசெல் லித் தோற்றத் தாய்ந்து, கங்கைதரித் தருள்சடையோன் பலதலத்து மான்மியந்தன் கருத்திறேர்ந்து, சங்கையில்செந் தமிழின்மொழி பெயர்த்தியற்றுங் கடப்பாட்டிற் றலைமையா னேன். (௭)

மின்னுமர ளடியன்றிக் கனவினும்வே றெண்ணுத விர தம்பூண்டோ, ரின்னுமெய்போ லியர்பலருக் கிலக்கியமு மி லக்கணமு மெளிதுசெய்தோ, னன்னவன்பேர் மீனாட்சி சுந் தரநா வலவனெனை வாய்ந்தோரியாரும், பன்னுபுகழ் பூதல முமீதலமும் பாதமுமும் பரவுகின்றேன். (௮)

மற்றவர்மான் மியப்பெருமை யருமையுட னுளத்துணர் ந்து மகிழ்பே ரன்பாற், கற்றபய னின்றடைந்தோ மிம்மைய றுமைப்பயனுங் கதிர்க்குமீதென், றுற்றருமை பெருமைதொ ண்டர் புராணவிரா சியமுழுது மொருங்கே தோன்றச், சொ ற்றபிள்ளைத் தமிழெனவோர் பாமாலைத் தொடுத்தனன்மெ ய்த் துறவோர் போற்ற. (௯)

## சிறப்புப்பாயிரம்.

வென்றபுக ழினையார்மான் மியந்தமிழால் விரித்தருளு மென்மையாள, ரொன்றுபுகழ் மரபிலுளா ரிதயத்த னரிய ரென வுவந்து சான்றோர், நன்றுமொழி துறைமைசையிற் சுப்பிர மணிய குருமணியுண் ணயந்து நன்றெறன், றென்றுமுடி யடி பணிடோறுந் தளக்கவலைய வியக்கவாங் கேற்றினனே. (௪௰)

## சிறப்புப்பாயிரம் முற்றியது.



## ஆண்பாற் பிள்ளைக்கவி.

சாற்றரிய காப்புச்செங் கீரைதால் சப்பாணி
மாற்றரிய முத்தமே வாரானை—போற்றரிய
வம்புலியே சிற்றிலே யாய்ந்த சிறுபறையே
யம்புசிறு தேரோடும் பத்து.

## ஆண்பாற் பிள்ளைக்கவியின் பருவம் பத்துக்கும் விவரம்.

| | | | |
|---|---|---|---|
| காப்பு ... | ...இரண்டா மாதம் | வருகை | ...பனிரண்டாமாதம் |
| *செங்கீரை | ...ஐந்தா மாதம் | அம்புலி | ...பதினைறு மாதம் |
| தால் | ...ஏழா மாதம் | சிறுபறை | ...இரண்டாம் வருஷ |
| சப்பாணி | ...ஒன்பதா மாதம் | சிற்றில் | ...மூன்றாம் வருஷ |
| முத்தம் | ...பத்தா மாதம் | சிறுதேருருட்டல் | ...நான்காம் வருஷ |

* செங்கீரை-ஒருகாலைமடக்கி யொருகாலை நீட்டி யிருகைகளையும் நிலத்திலூன்றிக்கொண்டு தலை நிமிர்ந்து முகமசைய ஆடுதல்.



உ

திருச்சிற்றம்பலம்.

குன்றத்தூர்

# சேக்கிழார் சுவாமிகள்

# பிள்ளைத்தமிழ்.

## காப்பு.

மாமேவு வான்பிறை முடிப்பிறை யிரண்டென்ன வாய்க்கடைத் தோற்றியவிரு மருப்பிரண் டென்னவங் கைக்கோடுண்டென்ன மார்பின்முத் தார மென்னப்,—பாமேவு பேருதா பங்கமென வரைசூழ் படாமெனத் தாளின் முத்தம், பதித்தகழ லெனவிரவ மேலோங்கு பேருருப் பண்ணவனை யஞ்சலிப்பா,—மேமேவு ஞானசபை யிறைவர் தம்மேனியி னிணங்குற வொழப்புமெலா, மென்னுமறை யாதியாக் கொண்டவ ருயிர்க்கருளு மியல்பனைத் துந் தெரித்து,—நாமேவு மம்முதலெலா டொன்றவினை யுருபுதொகநான் கனடி யாதிசெய்து, காழ்சிறி ஞெனறி விளக்கியொளிர் சேக்கிழார் நற்றமிழ்க் கவி தழையவே. (க)

## குருவணக்கமும், அவையடக்கமும்.

ஓங்குகைலாயபரம்பரைநந்தியடிகட் குறுமரபெட்டா லது*பிற்றென்றலாயெங்க, ளுயர்திருவாவடுதுறைச்சுப்பிர

* பிற்றென்றல் திருநந்திதேவர், சனற்குமார தேவர், சத்திய ஞானதரிசனிகள், பரஞ்சோதிமஹா முனிவர், மெய்கண்ட சிவாசாரியர், அருணந்தி சிவாசாரியர், மறைஞான சிவாசாரியர், உமாபதி சிவாசாரியர்.

மணியகுரவற் குற்றபத்தொன்பதாவதா *முற்றோன்றலாய்ப் பொலிந்து,—தேங்குசிவப் பிரகாச முதலியவாய் மலர்ந்து திகழு மாபதிசிவனேகுன்றையுற மேவித்,திருந்துமோர் வளங் கொண்டு பெருமையின் மேலாகிச் சிறத்தலாற் செம்மேனிக் குமரவே ளொத்தும்,—பாங்குடை றத்துதிக் கையொடோர் கோட்டத்தனைய பயிற்சி யினக்குமர வேடிருத் தமையனொத் தும், பரவுசேக் கிழானெனும் பேர் பரித்தலி னக்கணேசப் ப ண்ணவனையினி துயிர்த்ததிருத் தாதையொத்தும்,—வீங்குபு கழ் படைத்தவருண் மொழித்தேவன் புராணம் விரித்துரைத் தா னவனடிதாழ்ந் தென்னறிவிற்கேற்ப, மேயபிள்ளைத் தமி ழெனவொன் றுரைப்ப லந்தறிவான் மிக்கவர்தங்குழாத்தினு க்கு மிக்கநகை தருமே. (உ)

---

## காப்புப்பருவம்.

கார்கொண்ட சோலைசூழ் மாரூரரோராரைக் காணம்பியாரூ ரர்முக், காலனைக் காலாக முடிவுசெய் தருண்மாக் கவித்தி னைசயின் வீற்றிருக்கு,—மேர்கொண்ட தில்லைமூவாயிரர்முன் வழுவரு மெழுவருந் தழுவருமெம, திசைந்த மூல்கொண்

---

* முற்றோன்றல் அருணமச்சிவாயர், சித்தர் சிவப்பிரகாசர், நமசிவாயமூர்த்திகள், மறைஞான சுவாமிகள், அம்பலவாணதேசிகர், உருத்திரகோடி சுவாமிகள், வேலப்பதேசிகர், முற்குமாரசுவாமி தேசிகர், பிற்குமாரசுவாமி தேசிகர், மாசிலாமணி தேசிகர், இராமலி ங்க தேசிகர், முன்வேலப்பதேசிகர், பின்வேலப்பதேசிகர், திருச்சிற் றம்பல தேசிகர், அம்பலவாணதேசிகர், சுப்பிரமணியதேசிகர், அம் பலவாண தேசிகர், சுப்பிரமணியதேசிகர்.

பாமேவொரு நாவலர்பிரானென்னலால், வெண்மைதவிர்புக
யார் முதன்மூவரும்புகலும் வேதத்தமிழ்க்க ணுள்ள, மெய்
மையைவிரித்துத் தெரித்தருள்செய்குன்றையூர் வேந்தைப்
புரக்கவென்றே. (௯)

திருநின்றசெய்யுள்புக னீற்றறையுளருகந்தர் சிந்தை
வெந்திடவமர்ந்துஞ் செறிதுயர்க்கடன்மறக் கல்லொடவரா
ழவொர் நினைக்கடற் கண்மிதந்துங்,—கருநின்றகண்டரருள்
வெளிசெய்நாவரசர்முற் கருதுபுக ழெழுவோரையுங், கருத்
திடையருத்தியி னிருத்திமற்றவர்பதங் காதலித் தாக்குறிப்
பார்,—தருநின்றசெங்கைத்தலங்குவித்திடுமனங் கையலொ
ருபாகர்தொண்டர், சரித்திரமனைத்துமொரு வாதுறநிரம்பத்
தவாமன வறைக்குவிக்க,—வருநின்றசீர்கொள்புலி யூர்க்
கோட்ட மேயதற் கொப்பவுலகேத்தநா ளும், பேராங்குபுலியூர்க்
கோட்டமேய குன்றத்தூரொருத்தனைக் காக்கவென்றே. (௰)

வம்பறு யாப்புரவில் வப்பறு முலையொரு மடக்கொடி
யைவெட்ட லின்றி, வண்பிரம சாரியிலை வைகுநா ளையொரு
மடப்பாவை யைப்பிறப்பித்,—தம்பறு வுந்திற லரிக்குநா
போலெழுந் தலகையார்க் கும்பிறப்பித், தலாயவர்மு னை
வரைவெ லறுவர் பொற்பாத மல ருச்சி வைத்தேத் தெடுப்
பா,—மம்பறு வாழ்முழு தாண்டதிரு முனிவிரித் தருளிய
தமிழ்க் காக்கயா, வருன்மூல ரருண்மறைப் பொருடெரியு
முன்னெருவ ரருண்மறைப்பொருள் விளக்கு,—நம்பறுவித்
தியா ரணியமுனி வாளுள நயப்பயாப் புறவிரித்த, நாவலர்

[illegible]ரானைத் திருக்குன்றை யருண்மொழி நலத்தனைக் காக்க வென்றே. (௫)

வார்கொண்ட வனமுலை பெணுங்கவியுளுயர்வைவாரண் பிளர்க டலைவணக்கி, வாயார வாழ்த்தித் தியானித் திடச் சங்க மங்கைவரு சாக்கியர்முத,— லேர்கொண்ட புகழ் கொண்டவை வேலவடையு மடையுற்று மெய்தாது மாகின்ற, வினியருக மடையுமேற் றொளிர்கின்றவ றுவவாயு மிறுவனாயு மேத் தெடுப்பாங்,—கார்கொண்ட வடணசிங் காமணியை வளவர்கோன் கங்குல்பக லாராய்தரக், கண்டொழித் தாவ திது வேயென்று தொண்டர்தம கத்துவங்கருதவுய்த் துய்,— பார்கொண்ட மன்னரல் லவைநீக்கி நல்லவை பரித்திடச் செயலமைச்சர், பண்பென றெரித்தகுன் றத்தூ ருதித்த வெம் பரமனைக் காக்கவென்றே. (௬)

பொய்யடிமை யில்லாத செய்யுளி னிலக்கியப் புகலிலக் கணமெய்ஞ் ஞானப், போதநூ லாதியா யாவுமறி றபவுணர்பு புரகரனை யேத்திந்து,— மெய்யடிமை வாய்ந்தசங் கப் புலவர்முதலாய வித்தக வொழுக்க மிக்கார், விண்மருவு வார்பரவு மெண்மருமெம் மிதயம் விடாதமா வேத்தெடுப்பாங்,—செய்யமல ராதன மிருந்துபல சாதியுஞ் சேரப் படைத்த தேவுஞ், செப்பரிய வாயவவ் வச்சாதிகுறிகுணஞ் செய்கைகுடி கொளுமி யியல்பு,— வெய்யமொழி புணவுமுன் விரித்தெலா மறியவலர் மெய்யறிஞ ரொனவிளக்கி, மேம்பட்ட வேளாண் குலக்கதி ரொணுங்குன்றை விமலனைக் காக்க வென்றே. (௭)

கன்றக்கண்டயாப்பினைந் ததிகாரிமேலொரதி காரிமலை
மங்கை யொருபாற், கலந்திருக் கவுநிருவி காரிநிர கங்காரிகா
ரியா காரிநாளு,—மறைக்கண்டருஞ்சோதி யோங்காரி யரு
ளேய வாங்காரி முதலமர்ந்த, வண்கணம் புல்லர்முற் சைவ
ரா மைவரு மகிழ்ச்சியுற வேத்தெடுப்பாம்,—பிறைக்கண்ட
மிதுபகலின் முகிலுழைபூவ ததிசயப் பெற்றியென் றுடுவார்
கண், பெட்பப் பெருக்கெடுத் துவருபா லாற்றலை பிறங்கு
வளை விசவலைத்,—துறைக்கண்ட நிமிர்கந்தி யஞ்சோலை த
வழ்தருந் தொண்டைவள நாட்டு நாட்டுக், தொல்புகழ்க்
குன்றைவரு பாலறு வாயர்முற் றோன்றலைக் காக்கவெ
ன்றே. (௮)

கடல்சூழ்ந்த யாப்பம ரறஞ்சூழ்ந்த செஞ்சக் கழற்சிங்க
மன்னன் மன்னிக், கழியா மடங்கழி யிடங்கழியருட்கே கரு
த்துணை செருத்துணையரில்,—விடல்சூழ்ந்த சிந்தையொடுசிக
ழ்த்துணைபெறுதுற விளங்கும்புகழ்த் துணைவய, வேட்புலி
யெனுந்திருக் கோட்புலியிவ்வை வகாயு மேன்மேலுமேத்தெ
டுப்பா,—மடல்சூழ்ந்த தொண்டர்வர லாற்றுவிரி யுலகெலா
மறியத் தெருட்டு குரவிற், கமையப் புனைந்ததுகொல் சாதிய
டை யாளங்கொ லமையுமெது சொலினு மென்னி,— மடல்
சூழ்ந்த செங்குவளை மாலையணிதிண் டோள் வலத்தனை நிலத்
தனை வரும், வாயார வாழ்த்துகுன்றத் தாருதித்த பெரு
வள்ளலைக் காக்கவென்றே. (௯)

பத்தரா யென்றெடுத் தருடிருக் கவியிலிரு பைங்கோ
தையாரை வேட்ட, பான்மைக் கிணங்கவோ ரிருபுதல்வி

யார்தமைப் பயவாமலே பயந்த,—சுத்தராய் வன்றொண்ட ரின்றொண்டர் தழுவித் துதிக்கவைத் தவர்களாய, தொகையுளா ரொன்றுமெழு வகையுள்ளார் பொற்பதந் தொழுதேத் தெடுத்தல் செய்வா,—நித்தராய் பன்றுவரொட நவில்வா ருவக்கும் வெண் ணீற்றொளிநிலா வொளியெண, நினைந்தணைந் தாங்குக்கு வளைபொலி யவின்றே னிரம்பயுண வளியடைந்தாங்,—கத்தராய் கண்மணித் தொடைபொலி தரப்பொலியு மம்புயத் தவனைநம்பு, மளவா வளந்துன்று குன்றைநகர் மேயவரு ளாளியைக் காக்க வென்றே. (க௦)

மன்னிய திருப்பாட்டி லாகார முதலிய மறந்திராப் பகன்றியன் றுரைத்து வாழ்வார்க ளேறுய்காத வண்ண நவமணி யாலயம் புரிந்து,—மின்னிய சடைப்பரமர் பிறதனி மறுத்தடை விதந்கண் டுவந்தபூசல், வித்தகர் முன் மேயவெழுமொரு மெய்மிதயத்து மேவலைத் தேத்தெடுப்பாம்,—பன்னியதொ கையும்வகையு முதலாதலான் முதற் பகர்சைவ ரோயருளினார், பாவுவிரி யிறுதியா தலினிறுதி யாரெனப் படுசைவரோயருளினார்,—துன்னிய பொருத்தமிது வென்றுலக மகிழ்தரத் தொண்டர்வா லாறணைத்துந், தூவாய் மலர்ந்தவருண் மொழிவானை வனையான்றதோன்றலைக் காக்கவென்றே.(கக)

காப்புப்பருவம் முற்றிற்று.

---

## செங்கீரைப்பருவம்

ஒன்கொண்ட பொதுவகத் துலகெலா முய்யநா றுலகெலா மென்ற நீஞ்சொ, லுவந்தே டெழுத்தாணி கொண்

டெழு திரண்டுவகை யும்புலி யுறப்பதித்து,—வண்கொண்டு
வொருதாண் மடித்தூன்றி யொருதாள் வயங்குறவெடுத்தூ
ன்றியொண், வாய்கவிச் சுவையொழுக் கழிவிப்பதெனவமுத
மாட்சிமை யொழுக்கெடுப்ப,—வெண்கொண்ட நெற்றிநீ றி
ளகிலவு மொண்கா திருங்குழை யிளங்கதிரும்விட், டெறிப்ப
விள முறுவலுந் தோன்றமலர் திருமுக மெடுத்துவா னளவு
நொச்சித்,—இன்கொண்ட குன்றையம் பதியருண் மொழி
த்தேவ செங்கீரை யாடியருளே, திருத்தொண்டை நன்னாட்டு
வேளாளர் குலதிலக செங்கீரை யாடியருளே. (க)

பொருவரிய தொண்டர்கள் புராணத்து ளிறையருட்
பொலிவா ளிரம்புசொற்கள், போற்றிடு விருப்பநீர் நம்மை
மழுவாக்கிவாய் புகல்குதலை மழலையென்ன,—மருவுமொழியா
சையுற் றீர்பய னுறுதென்ன வள்ளான் மறுத்துரைத்தால்,
வார்த்தைப் பயன்கொள வேலைத்தக்கசான்றுநீ வாய்மலர் புரா
ணநின்று,—பொருவரிய தாஞ்செப்ப லுற்றபொரு ளென்ற
கவி யோதவேண்டுவ தினியெவ, னுனதுசொற் பயனுணர்க
விலமென்னின் மழலை யவ்வப்பதம்பொய்ம்மையாமே,—திரு
வமிகு குன்றையம் பதியருண் மொழித்தேவ செங்கீரை யா
டியருளே, திருத்தொண்டை நன்னாட்டு வேளாளர் குலதி
லக செங்கீரை யாடியருளே. (உ)

ஒப்பரிய தொண்டர்தம் மருமையும் பெருமையு முவக்
குமவ ரவர்செய்கையு, முவமை யில்லாச்செய்கை நுட்பமுந்
திட்பமும் மும்பர்கோனரு டட்பமுங்,—தப்பரிய செந்தமிழ்
த்தொடை நடையு மடையுந் தவாப்பொரு ளணிச் சிறப்பும்,

தமிழ்மறை யடங்குபல மந்தணமும் வெள்ளிடைத் * தவிரு
ம்வெற்பென விளங்க,— வெப்பரிய முழுமதிக் குடைநிழற்
றனபாயன் மேயவவை யகமுவந்து, வியந்துமெய்ப் பாட்டி
னொடு பாராட்டிமகிழ மேன் மேல்விரித் தருளியபிரான்,—
செப்பரிய குன்றையம் பதியருண் மொழித்தேவ செங்கீரை
யாடியருளே, திருத்தொண்டை நன்னாட்டு வேளாளர் குல
திலக செங்கீரை யாடியருளே. (௫)

தாயவொளி யிருட்புபொன் மாளிகைத் தில்லைச் சபாந
டனாகர் பெத்தான் சாம்பானை யுய்த்தவாம் திருவாணை யிக்
கையாற் றருமுத்தி யடைவியென் றே,—மாயதிரு முகமு
ய்த் திடப்பெற்ற கைலாய வம்பரம் பனாயி லளவா, வருந்
துருவ மாயவ தரித்திட்ட மெய்ஞ்ஞான வற்புதவை மாபதுமி
வ,—னோயமிக விம்மைக்கு மறுமைக்கு மாதார நியமதி நெ
ஞ்சுணர்ந்து, தினந்துவர லாறருமை பாராட்டி யருள்செய
நிரம்புமான் மியமடைந்தாய்,—நேயமிகும் குன்றையம் பதி
யருண் மொழித்தேவ செங்கீரை யாடியருளே, திருத்தொ
ண்டை நன்னாட்டு வேளாளர் குலதிலக செங்கீரை யாடியரு
ளே. (௬)

பொருந்துமா யிரமுகக் கங்கைகமழ பிறைகதிர்கள் பொலி
யுமா யிரமுள்ளவன், போற்றென்றி யாயிர மறைக்குமெட்
டாச்சென்னி பொற்பவா யிரமுடையகோன்,—மருந்துநே
ருள்பெற்ற மைக்கேற்ப வாயிரம் வயங்குபொற் கானிதீஇய,

---

* தவிர்தல் = நீக்குதல்.

மண்டப மிவர்ந்தா யிரங்கொண்டர் வரலாறு வாய்மலர்ந்
தவனாவிவா,—யிருந்துசூழ் கொழுவுண்டு புண்டரீ கத்தின்
வாயினையுபுல வறத்துவட்டி, யிருஞ்சங்க னம்பே டெனத்த
ழுவி நாணமுற் றியல்பேடு மற்றென்று னுஞ்,—செருந்துசூ
ழ் குன்றையம் பதியருண் மொழித்தேவ செங்கீரை யாடிய
ருளே, திருத்தொண்டை நன்னாட்டு வேளாளர் குலதிலக
செங்கீரை யாடியருளே. (ரு)

வேறு.

தோம்பல வுடையேம் பிறவியை யஞ்சேஞ் சுடர்நின்
சினகரமுற்,றுசேக மெழுகே மிரவும் பகலுந் துதியே மாயி
டினு,—நாம்பல தேவரை நண்ணே மெண்ணே நயவேம் வியவேமா, ஞண்மலர் பலகொடுநின் னடியேத்தி நயத்தலே மே
ற்கொண்டு,—கூம்பல்செய் கையே மெய்யே மிதனிற் கோ
மா னியருளுங், கூலியெ வன்கொ லவாயதுல்கிற் குலாவு
ழுவப்புறுவே,—மாம்பல வாவுதன் மேயபுயாசல வாடுக செ
ங்கீரை, யாரரு ளாகர சேவையர் காவல வாடுகசெங்கீரை.()

புண்ணிய முதலே பொங்கொளி மணியே பொய்யாப்
பெருவாழ்வே, பொள்ளலின் முத்தே கள்ளமில் வித்தே பு
ளையில் சுவைப்பாகே, தண்ணிய வமுதே மண்ணியன் மதியே
தமிழ்நா வலரேறே, சத்துவ நிதியே பொத்திய மலநோய்
சாடு பெரும்பகையே,—யெண்ணிய வன்பரு ளத்தமுதூற
லினிக்கு நறுந்தேனே, யென்றும் பத்திரசங்கனி கனியே
யென்று னினுமெங்கட்,— கண்ணிய பொருளே யாய்பவர்

தெருளே யாடுக செங்கீரை, யாரருளாகர சேனையர் காவல வாடுக செங்கீரை. (எ)

சூழிய மேவிய கொண்டை விளங்கத் தொட்டுக் கட்டியபொற், சுட்டி யிலங்கப் புண்டரநீறு துதைந்து நிலாக்கால, —வாழிய கனிவாயூறற் றேறன் மார்பின் வழிந்தோட வாடிகா திற்புனை குழையிற் செவ்விய மணியின வொயில்வீச — வீழியவாவிய வாயின முறுவல் விளங்க வரைப்பொன்றென், மின்னுக் காலப் பேரொழி னேக்குநர் விழிகள் விருந்து செய, — வாழிய வன்பரகத் தமர்செஞ் சுடராடுக செங்கீரை. யாரருளாகர சேனையர் காவல வாடுக செங்கீரை. (அ)

இவர்சரி யையரிவர் கிரி யையர் யோகத் தினரிவரிவர் ஞான, வியல்பின ரிவரி லறத்துவழாதவ ரிவர்துற வறநின்றுர்.—கவர்மன மொழியிவர் பிரமசரியநிலை கைக்கொண்டோரிவரோ, கண்குளிர் வேடம் பொருளென நம்பினர் கருதருபிவராதித்,—தவர்நிலை யுணரா வருளின னிறைவன் றக்கனவுலகதியச், சாற்றின னலனவ னேயுலகதிய சாற்றிய படியென்ன,—வவரவர் செயன்முத லருளிய வல்லவ வாடுக செங்கீரை, யாரருளாகர சேனையர் காவல வாடுக செங்கீரை, ()

நந்தி வரைத்தலை யொருமுனி சாபி நயக்கப் பொழிதீம்பா, னதியா யங்கம் சோடுபுகூபநயங்கிள ரோரிகுள,—முந்தி யெழுங்கா லோடை தடாக முதற்பல வுந்நிறையா, முழுத்தசு வைப்பா லாக்குபு பின்னு மூரிக் கடல்புக்குப்,—புந்தி யவாவ நிரம்பவின் மாயோன் புரிகண் டுயிலு மிடம், புகவிது

வோவரு வோவென வாயப் பொலிதண் டகொட,— வந்தி
மதிச்சடை யண்ணற் கினியவ வாடுக செங்கீரை, யாரு
ளாகர சேவையர் காவல வாடுக செங்கீரை. "(க0)

செங்கீரைப்பருவம் முற்றிற்று.

---

## தாலப்பருவம்.

வெண்ணைத்தூறி வயி றுளைந்து விற்று விற்றுக் கருவுயிர்த்த, வெண்ணரித் திலத்தை யரித்தெடுத்துவெள் வாய்க்களமர் கலைக்குவிக்க,—வண்ணக் குவளையின் றுவமிக்கும்வாயோதிமயிர் குடைந்தெழுந்து, மற்றைக் குவியன்மே லிவர்ந்து மருவிமுதிரா வெயில் காயக்,—கண்ணைக் குறவுண் டெழுகருமக் களபர்மரள முட்டையினைக்,கதிர் நித்திலமென் றுறக்குவித்தோங் கடையே மயங்கியென நாளும்,—தண்ணந்துறைசேர் குன்றத்தூர்த் தலைவா தாலேலோ தாலேலோ, சகலாகம பண்டிததெய்வச் சைவா தாலேலோ தாலேலோ. (க)

கண்பா லெவருமுறத்தரிக்கு கலக்கூர் நீற்றின் வெள்ளொளியா, ஞவாலெவரு மரமுழுக்க நாளுஞ்செயவாம் பேரொளியா,—லெண்பாற் புலவ ரமுதுகொளற் கெத்த விடத்துநெருங்குதலா, லேர்சாலரம்பை யெழுதலின லியனுகேசன் வைகுதலாற்,—கண்பாற் கரிதோய் திருமடந்தை காமுற்றிடலான் மாளிகை மேற், கருமால் கிடந்து கண்டுயிலுங் காட்சித்திறனாற் பொங்கி யெழும்,—தண்பாற் கடனேர் குன்றத்தூர்த் தலைவா தாலேலோ தாலேலோ, சகலாகம பண்டிததெய்வச் சைவா தாலேலோ தாலேலோ. (உ)

முத்தவெழுமாற் றுயர்பொன்ஞான் முழுச்செம்மணியான்
மாளிகையு, முதுகுளிகையுந் தெற்றிகளுமுகப்பும்பிறவும
மைதலினு,—விந்தகமும் பொன்னகரந் திலுமிக்கிமைத்தல்
விதியுளத்த, லெண்ணரியபீட மகடேஉவா மெல்லாவுயிரும்
விழி யிமைத்த,—னந்தவருட் சம்பந்தர் மணந்தன்னரியவர்க்
குங் கதிகொடுத்த, நலம்போலிதுசார் புவியகத்து நகர்க்கெ
லாஞ் செய்தன னென்று,—சந்தந் தவர்சொல் குன்றத்தூர்
த் தலைவா தாலோ தாலேலோ, சகலாகம பண்டிததெய்வச்
சைவா தாலோ தாலேலோ. (௮)

முரிவில் வயிரங் கால்யாத்த முழுமாளிகை பாற்கடல்
கடையா, முன்னந் திருமா லுருவொத்து முயங்குமென
வுமதற் கருகே,—பிரிவில் கருநீலங் குயிற்று பெருமாளிகை
யக்கடல் கடைந்த, பின்ன ரன்று லுருவொத்துப் பிறங்கு
மெனவு மதற் கருகே,—யெரிவிலிடு செந்துகிர்மாடமெயில்
சூழ்காஞ்சி யடைந்தன்று, னைந்து முருவொத் தலைதென்று
மெக்கா வலருங்கொண்டாடச்,—சரிவில்வளஞ்சால்குன்றத்
தூர்த் தலைவா தாலோ தாலேலோ, சகலாகம பண்டிததெய்வ
ச் சைவா தாலோ தாலேலோ, (௯)

சேறுமணக்கு மடங்களெலாந் தூய்மை மணக்குஞ் சிந்
தை யெலாஞ், சுவண மணக்கு மாடையெலாந் தொங்கன்
மணக்குந் தோள்களெலாஞ்,—சேறு மணக்குங் கழனியெ
லாஞ் செல்வமணக்கு மாடமெலாந், தென்றன் மணக்கு மே
டையெலாந் தெய்வமணக்குஞ்செய்யுளெலா,—நீறுமணக்கு.
நெற்றியெலா நெய்யேமணக்குங் கறிகளெலா, நெருப்புமண

க்குங் குண்டமெலா மேயமணக்கும் வீதியெலாஞ்,—சாறுமு
ணக்குங் குன்றத்தூர்த் தலைவா தாலோ தாலேலோ, சகலா
கம பண்டித தெய்வச் சைவா தாலோ தாலேலோ. (௫)

## வேறு.

ங்காமிகுந்த வருந்தவமேவிய தோலா நாத்திரண
ராயாக்கிளியரு டொல்காப் பியமே தோன்றுமிலக்கணமாப்
ங்கமி லாச்சமை யாதியடைந்து பராஞ்சிவ சின்னமுறும்
ாகமரூஉம்பக் குலமோ கேட்கப் படுமதி காரிகளா
வங்க மெடுத்துழ லன்பமொழிந்தின் படைவது வேயமரு
ற்புதமேவிய தொண்டர் புராணம தருள்கரு ணைக்கடலே
சங்கமரீஇயமர் குன்றைத் திருமுனி தாலோ தாலேலோ
சைவப் பயிர்தழை யத்தழையும்புய ஞலோ தாலேலோ. (௬)

அடியார் பெருமையு மருமையுநாளு மறியம் புலவாணை
வர்வரலாறு விரித்துரை செய்பவ ராமென வுட்கருதிக்
டியார் மற்றவ ரன்பத்தனையுங் கண்காண் படிசெய்து
மருமுதலு மெடுத்தரு ளினரிக் கடல்சூழ் புவியிடையிப்
டியார் பெற்றூர் தமிழ்மான் மியமெப்பாடைக ளுக்குளதிப்
க்கியகந்தவ மென்றுபல் லோரும் பகரப்படுபவதீங்
டியார் தடிசூழ் குன்றைத் திருமுனி தாலோ தாலேலோ
சைவப் பயிர்தழையத்தழை யும்புய ஞலோ தாலேலோ. (எ)

பத்திச் சுவைநனி சொட்டச் சொட்டப் பாடிய கவிவ
லவ, பயனில தாகுஞ் சிந்தாமணிவழி படர்த லெனப்போ
தித்,—துத்திச் சுமைபொருதோள்வைத்திடுபுலுயர்த்தோன்

## சப்பாணிப்பருவம்.

விழைபயறமுதற்கல்வி யறியுநுண்ணறிவும் மேதைத்திறங்கொழுக்கு, மெய்விளை யுஞ்சேயார்த் தழீஇயவர்சொலினிதேற்குமேம்பாடு மாறுகருதா,—மழைநிகர்கொடைத்திறனு நலிவருஉ தினிமீட்டு மாண்புமாற் றலனாயஞ்சா, வன்மையுமிடங்கால முதலறித லுங்கடிய மாற்றநவி லாதகுணமும்,—முழையரும் விருப்பமறி யாதடக் குதலுநல னோங்குகாட்சிக்கெளிமையு, முடையவிவ னுலகுவத் தற்குரிய னென்றுளந் துன்னியிறை புனையமணிக,— டழையுமுடி தொட்டுக்கொடுத்தருண் மலர்க்கைகொடு சப்பாணி கொட்டி யருளே, தண்டமிழ்க் குன்றையாங் குன்றுதித் தெழுபானு சப்பாணி கொட்டியருளே. (க)

கார்க்கோல மாலோன் புரந்தருள்வ னெனுமொழிமு கமறையமைவேளாண்மையைக், கருதவபி தானங்கொள் குலமே யெனப்பனுவல் கற்றவரியம்ப மறையோர்,—போர்க்கோலமன்னரொட் டியர்மூவர் புறமெனப்புகன்மூவர் பசிவருத்தம், போக்கினை மெனக்களிப் புறவிலே கருமது புகன்றுமகிழ்தலைசிறப்ப,—வார்க்கோல முலைமங்கை பங்கர்தளி முற்பலவும வன்பூசை யொடுசிறப்பு, மாறாது பொலியமழை வளனுஞ் சிறப்பவள வாப்பெருமை வாய்ந்தமேழி,—தார்க்கோலொடுங் கொடுஞ் செங்கைத் தலங்கொண்டொர் சப்பாணி கொட்டி யருளே, தண்டமிழ்க் குன்றையாங் குன்றுதித்தெழுபானு சப்பாணி கொட்டி யருளே. (உ)

மேவாத பாயுடைஇத் தலைமயிர் பறித்துழறல் மெய்ச்சமய
ப்பாழ்ங்குழி, விழ்ந்தவர்மு னச்சமைய கண்டனைம் பேசி
யத்திவிடவாய்ந்து திருவ்வாயினின்,—றேவாத பிரதாப மொரு
கதி ரெனத்தோன்றி யுள்ளகோ கனகமெல்லா, முறமலர்த்
திடவவைகை யொப்பாயி னேறுமென் றுறப்பொலிக தேறுப
ன்று,—ராவாத மியமெனவ பயகல்கி யுண்மைநிலை யருளு
ங்கை நின்றெழுபுக, ழாலோர னெனத்தோன்றி யெல்லாங்
குவித்தகென் றென்றே ரெடுத்துரைக்குந்,—தாவாத வொளி
ர்நி னங்கைத் தலங்கொண்டொர் சப்பாணி கொட்டி
யருளே, தண்டமிழ்க் குன்றையாங் குன்றுதித் தெழுபானு
சப்பாணி கொட்டி யருளே. (ரு)

துருமமலர் கொய்துநீ ராடிநீ றிட்டுநனி தூயநனிருந்
தாலேனோ, துலங்குமொரு குறியிலா வாகனமெ னுதலோடு
தோன்றிடச் செய்வதன்று,—பெருமவடி யேங்களைப் புரவெ
ன்று தாழ்பவர் பெருஞ்செல்வ மெய்திடுயய, பிறங்குநாரா
யணவு பநிடத முறைத்தபடி பெற்றருடி யிவர் வணக்கங்,—
கருமமுத லெம்மலமு நீத்தின்பமெய்தக் கடைக்கணித் திடு
தியென்று, கனிந்துவேண் டுவதன்று சிறுவருந் தமுமிலாக்
காரியம வாவி நின்றேச்,—தருமசின கரமாங் கரங்குவித்தை
யவொரு சப்பாணி கொட்டி யருளே, தண்டமிழ்க்குன்றை
யாங் குன்றுதித் தெழுபானு சப்பாணி கொட்டியருளே. (சா)

எண்ணியவை யெண்ணியபடிக்கடி யவர்க்கருளு மீச
ன்றுளா லருளுறு, வினைசமயத் தொடக்கெல்லா மொழித்த
னமெனக் கைதட்டுத லுமோவாத்,—திண்ணிய மலச்செருக்

கெல்லாமொழித்தனந் தீர்த்ததவ் வாதையென்று, செப்பிற்
கைதட்டுதலு மிந்திரன் மலர்க்கணுன் றேந்துழா யவன் வா
ழ்க்கையு,—நண்ணிய வெழுங்கருத் துந்தவிர்க் தனமென்று
காடிக்கை தட்டுதலுமேர், நவிலநம் பரமகுரு சாமியென் றி
யாவருநயக்கவவ தாரஞ் செய்தாய்,—தண்ணிய மலர்க்கைத்
தலங்குவித் தையவொரு சப்பாணி கொட்டியருளே, தண்ட
மிழ்க் குன்றையாங் குன்றுதித் தெழுபானு சப்பாணி கொ
ட்டி யருளே. 

வே று.

வம்பிட் டொளிர்முலை மாதுமைகாண மணிப்பொது ந
டனஞ்செய், வார்முன மனைநந் தருகிட நிற்றன் மகிழ்தவர்
முதனல்க,—நம்பிட் டருமறை யோர்கை குவித்து நயந்துவி
யந்துடனே, நறுவிரைநல்கி யலங்கல் புனைந்து நகும்பரி வட்
டமெடுக்,—தம்பிட் டொளிர்சடை யவரே யிவரென் றறுயம
றக் தெளியா, யாத்திடு முன்னர் நன்னர்வியூகிய தள்ளுபு
கொள்ளு கெனக்,—கும்பிட் டேற்ற திருக்கை குவித்துக்
கொட்டுக சப்பாணி, கொற்றச் சேவையர் காவல நாவல
கொட்டுக சப்பாணி. (சு)

உண்ட லுடுத்தன் மணத்தன் முதற்பல வுள்ளுபு நன்
னயமா, ருத்தம வென்றடை யாதுல ரெண்ண மொருங்கு தெ
ரிந்தனையார்,—தண்ட விலாமகிழ் பூப்ப மலர்க்கைத் தலம்வி
ரியாதுகுவி, தருமொர் பழக்கமுன் னுள்ளதியாங்கள் செய்த
வம் வழிதாங் கொல்லோ,—கன்னல் செறிந்த கருங்கடல்
வண்ணன் கவிகெழு பாற்கடன் மேற், கண்டுயில் வதுபோர

வெண்சுதை தீற்றிய காமரு மாளிகைமேற்,—கொண்ட ...
றங்கும் குன்றத்தூரன் கொட்டுக சப்பாணி, கொற்றச் சே
வையர் காவல நாவல் கொட்டுக சப்பாணி. (௮)

படியிடை யொருமைப் பிறவரு ளணைபுரி பார்வல ...
திணையும், பகுத்தொரு முப்பொரு ளோடும் விரித்துப் பா
ஞ்சத் தெய்வம்,—கடிதலில் சினகர முள்ளனவோதக் க...
த்தவ நெஞ்சங், கனியக் கனியக் கண்ணீர்வாரக் கவிபா டியவி
றைவ,—வொடிவரி தாமிரு பன்னிருகோட்டத் துள்ளொரு
கோட்டமலா, தொருகோட் டமுமுற வில்லாய்கல்லா ...
வா வள்ளமைப்பல்,—குடிக ணெருங்குங் குன்றத்தூரன் கொ
ட்டுக சப்பாணி, கொற்றச் சேவையர் காவலநாவல கொட்
டுக சப்பாணி. (௯)

நாடிய விரிநூல் சொற்றிடுதிறஞ னன்னூலாசிரிய
குபா சுரமுத லுரைசெய்தலிஞ னவிலுரை யாசிரிய
னீடிய பரசமை யக்குழி வீழ்ந்தவர் நீப்பப் போதனைசெய்
நிலையாற்போத காசிரியனிவை நிகழ்தொறு நிகழ்தோறு
மாடிய ஞானத் திறனுறலான்ஞா னசிரியனு நீயென்
றான்றோர் பலரும் புகழப்படுபவ வகில மெலாஞ்சென்று
கூடிய புகழ்சால் குன்றத்தூரன் கொட்டுக சப்பாணி
கொற்றச் சேவையர் காவலநாவல கொட்டுக சப்பாணி. (௧௦)

நிலவிய நாகே சுரரினி தமர்தலி னிகழ்நா கேசுரமாய்.
நீண்மணிமாட நிலாவலி னிந்திர நீல பருப்பதமாய்க்
கலவிய செம்மணி மாடத் தாலொளி காலர தனகிரியாய்க்

சொல்லும் பொருளு நனிசிறப்பச் சுருங்கச் சொல்லன்
முதலாய,*தோட்டியமைய வமங்கலமாஞ் சொற்கள்புணரா
துறக்களைந்து,—வெல்லுந் தகைய முரண்காட்டி விலக்கு வி
லக்க விதிதழுவி, விரும்புநூல விலக்கியமே வேறுகாதென் று
லகேத்த,—வல்லும்பகலு மப்பலவ ரருடற்காய வரும்பணி
செய், தருள்பெற் றுய்ந்த வடியார்த மருமை பெருமை பா
ராட்டிக்,—கல்லுங்கரையக்கவிபாடுங் கனிவாய்முத்தந் தருக
வே,கனகக்குன்றை யனகசெழுங்கனிவாய்முத்தந் தருகவே.

எண்ணியிது செய்திடினிதனு லெய்தப் படுவதிஃதெய்
தா, திரியப்படுவதிஃ தாண்மையெய்தப்படலாற்பயனின்றே,—
நண்ணியவதை மறந்தொழிக நள்ளார் முனைமே லிப்பொழு
து, நயந்து படர்ந்து பொருதுவமே னமதே யாகு ஈதுவா
கை,—தண்ணி மயம்போற் புகழ்ப்போர்வை தாங்கற்காய
கருமமிது, தப்பா தாற்றப் பொருள்வருவாய் தவாதுண்டா
மென் றிவைமுதலாரங்,—கண்ணிவளர்வக் குறைத்தருள்செ
ய் கனிவாய் முத்தந் தருகவே, கனகக்குன்றை யனகசெழுங்
கனிவாய் முத்தந் தருகவே. (௪)

நிலஞ்சார் தெய்வக் கற்பகமே நிமல ஞானவா ரிதியே,
நீடுஞ் சைவப் பெருவாழ்வே நிலவா நின்ற குணக்குன்
றே,—வலஞ்சார் பெரு நாவல ரேறே மாறுவருட்சிந் தாம
ணியே, மதிப்பார் மதியுளெழுஞ் சுடரே வாழ்த்துவார்தம்
பெரும் பேறே,—புலஞ்சார்பத்தி விளைநிலமே போக்குவர
வில் பூரணமே, புந்திக் கினிக்குஞ் சுவையமுதே போற்றிய

* தோட்டி=அழகு.

னிமே லொருதாயர்.—கலஞ்சார் முலைப்பா லருந்தாத கரளி வாய் முத்தந் தருகவே, சனகக்குன்றை யனகசெழுங் கனி வாய் முத்தந் தருகவே. (ரு)

வே று.

நூலாறு தேர்ந்தவ ருளற்றுமக்குண்டங்க ளுக்கியழ ல்பாயமேய, நுவல்புலவ ருதாருண் டத்திற் சருப்பாய கோ ன்மைசான் மேக மெல்லாஞ்,—சாலாறு பாயவலையெரியுதநி பாயத் தவாதருவி வரைகள்பாயத், தையலார் குரிசிலார் மே ழ்சம்ப ராரிபொழி சரமெலாம் பாயமலரிற்,—காலாறு பாய வம் மலர்மதுப்பாயக் கமழ்ந்த பட்டத்தினின்றும், கற்பங்க ழந்தொடிய வாளைபாயப் பொய்கை கருமேதி பாயமிக்கு ப்,—பாலாறு காலாறு பாய்தொண்டை நன்னாட பவள்வா ய் முத்த மருளே, பாவுசீ ருலகெலாம் விரவுசேனவயர்பிரா ன் பவளவாய் முத்தமருளே. (சு)

மேயபல வாரியர்குழாத்திணுட்பூரியர்விராயதெனவ்வாய தூய, வெள்ளோதி மக்குழா நிலைகுலையமேதிகால் விசைத் தெழீஇப்பாய வாங்கண்,—ஞாயவெடி வாளையோர் பருகிலாங் கவிமோத வதினுதிர் பழத்தின் வெருவி, யம்மேதிகரையேற வதுகண்ட வவ்வாளை யாய*வா லாமைதீரத்,—தூயநெடு வா னீர் துளைந்தாடிமீளிற் றொடக்குநீங்காமை யெண்ணிச்,சோ திமதி மண்டலங் கீண்டமுத தாரையொடுதுளையக்கிழக்கிற ங்கும்,—பாயதடமலியுந் திருத்தொண்டை நன்னாட பவள வாய் முத்தமருளே, பாவுசீ ருல கெலாம் விரவுசே னவயர் பிரான் பவளவாய் முத்தமருளே. (எ)

---

* வாலாமை=அசுத்தம்.

மிக்குவருவெள்ளத்தெதிர்ந்தேறுபருவரால்வேகத்துருண்டு போதும்,வேழத்தைமுட்டுபு வெகுண்டுவெடி கொண்டெழாய் விண்ணாந்துளைத்துவிரைவிற்,—புக்குமகிழ்மழவிளங்கன்றது தெறித்தெழீஇப் போயதெங்கென்றுநாடும், புந்திப்பெருங்காம தேனுவின் மடித்தலப் பொம்மல்குழை வெய்துமுட்டத்,—திக்குநிக ழப்பசுப் பொழிகின்ற பால்வரால் செய்தபுழை யூடிறங்கித் திரைகளை யெதிர்த்துவருகுடிஞைக்கு முன்புதான் செய்த பெயரைப்புதுக்கும்,—பக்குநவி லருவளம் படுதொண்டை நன்னாட பவளவாய்முத்தமருளே,பரவு சீருலகெலாம் விரவுசே னையர்பிரான் பவளவாய் முத்தமருளே. (அ)

வீங்குகரு மேதியிணர் படுகட மருப்பினால் விடுபடாக் கடுவெலிவாய், வீட நீக்கி யுட்புகூஉ மென்கரும்பினைமென்று மென்றுதின்றிட வழிதரா,-வாங்குநிகழ் சாறப் படப்பையை நிரப்பிமே லரம்பையந் துடவைமோதி, யாறாகி நெற்போரடங்கச் சுமந்துசென் றலையாழி யிற்கலந்து,—தேங்குதிடர் செய்துவரு மாற்றியங் தமிழ்வாய்ச் செறிந்துவர லாவினிமையாய்த், திகழ்கின்ற தென்றெண்ணி யாடுநர்களுண்டுமகிழ் தேக்கவென்னாளுஞ்செயும்,—பாங்குபடு செல்வமென் பாற்றொண்டை நன்னாட பவளவாய் முத்தமருளே, பரவு சீருலகெலாம் விரவுசே னையர்பிரான் பவளவாய் முத்தமருளே. (கூ)

* நீளைநேர் மாதரொடு காளைநேர் மைந்தர்கணெருங்கி விளையாடுபாவி,நெடுவெள்ள முவராழியுட்புகவன்னார்குழீஇ

* நீளை=திருமான்மனைவி.

நிறைமலர்கொய் பொழில் வாவிவாய்—வாளைதா யெழவிட
பம் வைகுதேத் தடைகிற மடையுடைத் தென்னவழியு, மத
வெள்ள மும்புகக் களமர்கள் கருப்பாலை வழிசாற்று வெள்
ளமுமெழீஇ,—யாளைமோ தும்படி புகக்கண்ட வறிஞரே மு
ழியுமி தன்கணுய, வான்றநுண் ணறிவினு ராயினென் றே
தவமை யாப்பெரு வளங்குலாவும்,—பாளைவாய் கந்திமென்
பாற்றெண்டை தன்னுட பவளவாய் முத்தமருளே, பரவு
நூலெலாம் விரவுசே வையர்பிரான் பவளவாய் முத்த
மருளே. (கO

முத்தப்பருவம் முற்றிற்று.



## வாரானைப் பருவம்.

மண்டல மதிக்குமணி யாத்தவுச் சிப்பூவும் வண்பட்ட
முஞ்சுட்டியும், வாகுவல யமுமதா ணியுமுதய வெயில்செய
மகத்துவத் தொண்டர் சீர்த்தி,—விண்டல மதிக்கவெழு செ
ய்யவாய்ப் புகழெழுதல் விழையவெழு குறுமுறுவலும், வெ
ண்ணீறு முத்தமா லிகையுமிள நிலவுசெய வெய்யே மனத்த
டத்துக்,—தண்டலைமை யாதலர் சரோருகப் பதமேற் சதங்
கையுந் தண்டையுமொளி, தவாஞெகிழி யும்படீஇக் கலகல
விரட்டவுயர் சைவநிலை யெங்கு நிகழக்,—கொண்டலமர்
தொடை கொண்ட கரதலச் சேவையார் குலசிகாமணி வரு
கவே, கொன்றைச் சடாடவியர் மன்றைப் பராவியெழு குன்
றைப் பிரான்வருகவே. (க)

நிலவுவிரி மதியுமொண் பனியுமுல வாவெனினு நெஞ்சமெப் பொழுது நெக்கு, நெக்குருகு வார்மதியு மத்தலைக்கயர் கட்பனியு நேரேயு வத்தல்செய்வ;—கலவுசெம் மையுமணமுமுடைமைக் கிணங்கவெவர் கடையினைவ• யுள்ளவேனுங், கார்முறுவ வளிவிரா வுறமலர்வ வாயகோ கனகநறு மலரினண்டு,—முலவுதவி லன்புசெறி யுந்தலைப் பெயராமை யுள்ளவே னும்பெயர்த்தே, யுவகைகையெங்கட்குவர மறுசமய ருங்கெலா முட்குவர முறுவலித்துங்,—குலவுபுக ழேபோர்வையாக்கொண்ட சேவையார் குலசிகாமணி வருகவே, கொன்றைச் சடாடவியர் மன்றைப் பாராவியெழு குன்றைப் பிரான் வருகவே. (௨)

நீடுமின் பரிவையர் புணர்ப்பென்மருமைந்து நிகழ்ந்தமுங்கெடுதலே, நிலவுமின் பென்மருங் குணமூன்று மொழிதலே நிரம்பலுறு மின்பென்மரு,—நாடுமின் பிருவினைக்கேடென்மரும்பல நசித்தலே யின்பென்மரு,—நவில்விக்கிரகநித்த மின்பென்மருந்தோன்று ஞானமேயின்பென்மரும்,—பாடுமின் புயிர்கெடுதலென்மரும் பகுதிமேற்கெடுதலேயின்பென்மரும், படுசித்தி யின்பென் மரும்பிறரும்வாதம் படர்ந்துவரு திறலாறவளங்,—கூடுசெந் தமிழருமை யறிபெருஞ் சேவையார் குலசிகாமணி வருகவே, கொன்றைச் சடாடவியர் மன்றைப் பராவியெழு குன்றைப் பிரான்வருகவே. (௩)

செற்றசெங்கன்னல்படு தாளமுங் கந்திச்செழுஞ்சோலை படுதாளமுந், தின்மருப் புக்கடாக் களிறுமறை யப்போய செஞ்சாலி படுதாளமுந்,—துற்றபைங் கதலியிற் படுதாள

முப்பாலி துறைதொறு மெடுத்துவீசுஞ், சுடர்மணிக ளுங்
ருமகடவுவோர் வாருபு சுமந்துகொடு வந்துதாய,—முற்
மெய் கனுநிறை தாக்குவித் திடல்கண்டு மோகமுற் றோ
யாடி, முகந்திடமுறியெற்றியொன் றூக்கிவிளை யாடுசிறு முக
கத் தாள்பெயர்த்துக்,—கொற்றவன் றருமுதன்மை செ
ன்டுமிளிர் சேவையார் குலசிகாமணி வருகவே,கொன்றை
சடாடவியர் மன்றைப் பராவியெழு குன்றைப் பிரான் வரு
கவே. (௪

. மாயா மலங்கரும மலமிலவக் கேதுவாமலம்வேரொடு
கழுன்று, வலியதன் சத்திகெடு மாறுதிரு வருள்புரிய வம்
பதி செம்மலர்த்தா,—ளாயாத வெம்மனமு மகலாத தாளப
ப ரவிர்புதல்வர் தோபுர்தாங்க, ளடைந்த மார்க் கம்பொலி
வெய்யனும் திருந்நா ளராவுரி கிகர்த்த தூசு,—காயாத க
ளித்த மலரொடு விரித்தவிக் கடையிற்பெயர்த்துவைத்துக்
கருங்கொண்டல் போல்வானு மிகையெனக் கடல்சூழ்ந்த
சினிபு ளாளாரெல்லாங்,—கூயா தரிக்குங் குணந்தழுவு சே
வையார் குலசிகாமணி வருகவே, கொன்றைச் சடாடவிய
மன்றைப் பராவியெழு குன்றைப் பிரான்வருகவே. (ரு

## வேறு.

நலத்தினுயரும் பழையனூர் நாளும் பொலியு மவையக
த்து, நலிவுபுரிநீ லியைக்கண்டு நடுங்காநின்ற வணிகனுக்
கு;—நிலத்தினியனின் னுயிர்க்கிறுதி நேருமாயி ளியாமெ
லர், நெருப்பின் முழுகி யுயிர்துறப்போ நீயோ ருதியென்
றுரைத்தபடி,—வலத்தினுயரச் சொற்றவரு வண்ணமெபூ

...க் குழிமுழுகி, வடவா ரணியத் தாடொருவர் மலர்த்தா ளடைந்த வெழுபதின்மர்,—குலத்தி னுதித்தா ரருண்மழை பெய் கொண்டல் வருகவருகவே, குன்றைப் பொருமாளி கைக் குன்றைக் கோமான்வருக வருகவே. (கூ)

அண்டமளவும் வரைநாட்டி லாசர்கலக மாகவினு,லாங் காங் கொருவி வணிகரொலா மயனுட் டகம்புக் கினிதமர் ந்து,—விண்டகலகத் திறந்தெரிந்து மேயதத்த மிடம்புக, விதமுள் ளுருணர்ந்து தஞ்சாறு மேவியிருந்த மடக்கொடி யை,—மண்ட வழைத் தாக்கொடு சென்றிம் மடமாதினைக் கொள்ளுதிரென்ன, மயங்கல்கண்டு தங்கையெனும்வாய்மை சொடுமைத் தனக்கேன்மை,—கொண்ட குலத்தி னுதித்தரு ள்பெய் கொண்டல் வருக வருகவே, குன்றைப்பொருமா ளிகைக் குன்றைக் கோமான்வருக வருகவே. (எ)

விற்றங்கியவி பூதியினுல் விளர்ப்புற் றன்பின் வழியிய ங்கி, வேறுவேறும் பரசமய வெய்யகோடை முழுதொழி யச்,—சிற்றம்பலநா யகர்கருணைத் திரைவா ரிதியிற் படிந்து ண்டு, திசையெங்கணுந் தோற்றிட மின்னித் தீயவொழுக்க த் தபங்கறுத்துக்—கற்றங் கமையார் மலத்துன்பங் கழலவர மாமுழக்கெழுப்பிக், கருதாநின்ற திருத்தொண்டர் காமர்வா ய்ந்த சரித்திரமாங்,—கொற்றம் பொலியு மழைபொழிந்த கொண்டல்வருக வருகவே, குன்றைப் பொருமா ளிகைக்கு ன்றைக் கோமான் வருக வருகவே. (அ)

விள்ளு மலரா தனத்தானும் வெய்யசுதரி சனத்தானும், விரும்புமதிகா ரக்கதையா விளம்பாநின்ற கோல்கொள்ள,—

நள்ளும் பிரம சாியமெலா நாடும்பலாசக் கோல்கொள்ள
நான்கா மாச்சிரமத்தனையந்தார் நயந்து * மூந்தூழ்க்கோல்
கொள்ளத்,—தெள்ளும் வணிகர் குலமெல்லாந் தேற்று
துலாக்கோ லதுகொள்ளச், செம்பொன் மோலி யரசெ
லாஞ் செங்கோல் கொள்ளச் சிறுகோல்கைக்,—கொள்ளு
குலத்தி லுதித்தவருட் கொண்டல்வருக வருகவே, குன்றை
ப்பொருமா ளிகைக்குன்றைக் கோமான்வருக வருகவே(௯

எள்ளுந் திறத்துப் பரசமைய ரேறுவருக தேறுதலி
லெய்கலுணர்வின் கனுமதுரித் தினிக்கு மிருங்கோற் றேன்
வருக,—தெள்ளும் புலத்தர் பெறுகாம தேனுவருக வருக
தார், சிந்தா மணியைப் பொருட் படுத்தாச் செல்வச் சிந்தாம
ணிவருக—வுள்ளுமவருக் கெய்ப்பிடைவைப் பொத்துள்ளெ
ழுமொள் ளொளிவருக,—வொழியாப் பத்திக்கடல்வருகவு
வாதமைந்த சிவபோகங்,—கொள்ளுஞ் சைவப் பயிர்வளர்க்
குங் கொண்டல்வருக வருகவே, குன்றைப்பொருமா ளிகை
க்குன்றைக் கோமான்வருக வருகவே. (௰)

வாரானைப்பருவம் முற்றிற்று.

---

## அம்புலிப்பருவம்.

பாடுமதியோனெனப் படுதலால்வாய்விண்டு பதினு யிர
ஞ்சுரும்பர், பண்பாட வின்னறவு வீசுகழு நீர்மாலை பாங்கு
றவு வந்திடுதலா,—னீடுசுடர் படுசம்பு வொடுகூட லாற்கலை
நிரம்பத் தழைத்திடுதலா, னெடியவம் பரவையல றத்தோ

---

* மூந்தூழ்=மூங்கில்.

று லானென்று நிகழ்சாந்த மேயுடைமையால்,—வாடுதலி ல்சேக்கிழா ருதலா னகுமேர் வளந்தழுவ லாலெ மையன், மானுத நெறிக்துவரு கென்றழைத் தான்மழைபெய் வானங் கிழித்து மேற்போ,—யாடுகொடி மாளிகைக் குன்றைநக ரா ளியுட னம்புலீ யாடவாவே, யருளுருத் தேசுபொலி யருண்ம மொழித்தேவனுட னம்புலீ யாடவாவே. (௧)

மேயவம் போருக மெலாங்குவி கரத்தினை விராமனையட ங்கவளவா, வியன்சாலி யொடுபொலிய மகிழ்வையா லோ றவர் விழியின்வெளி வந்தொளிருவை,—பாயபா மன்சடா டவியமரும் வரநிப் பந்தமுளா நந்தமர்கரப், பண்ணவனு மிகையெனப் பல்லுயிரு மோம்பிடப் படுகருவி யாய் நின்ற னை,—நேயமிகு மிவையாதி யாலெய்கள் பெருமானை நிகரா திராயடுக்கு, நிலையேழு கொண்டமையி னுலகே மூமேயென நிரும்புபா வலர்புகழுதற்,—காயமணி மாளிகைக் குன்றை நக ராளியுட னம்புலீ யாடவாவே, யருளுருத் தேசுபொலி யருண்மொழித் தேவனுட னம்புலீ யாடவாவே. (௨)

இரவோனெனத்திரிவை நீமகாப் பிரபுவென வெய்கனை யன் பொலிருவ, னிகழ்ச்சி சால்கள்வனை யுவப்பை நீ யுவ வாமலிவன் வெறுப்பானெஞ் ஞான்று,—முரவோனெம் வள் ளலே கல்லோனெடுத்தினி யுரைப்பதெவ னியல்லோனே, யுயர்வினு லெமன்வான வன்கா னுனைப்பா ருனக்குமொரு தானவப்பேர்,—பரவோன லாதவனெனல்குறித் தல்லவோ பாதிகொண் டானின்னையெம், பண்ணவனை முழுமையுங் கொண்டனன் காண்மணிப் பணியெனத் தோள்புனைந்த,—

வாவோ னுணர்ந்திடுதி குன்றைநக ராளியுட னம்புலீ ய
வாவே, யருளுருத் தேசுபொலி யருண்மொழித் தேவு
னம்புலீ யாடவாவே. (

சாருசால் வீதித் திருத்தில்லை யம்பலந் தன்னிலெஞ்
ஞ்றுநின்று, தாண்டவ நவிற்றியுல குய்யச் செயும்பரம
குரவ னினிது செய்யும்,—பேறுமே வியவனுக் கிரகடு
தும்பெற்ற பெரியோ னிவற்கு வானோர், பேணுகுர வன்
ங்கள் நிக்கிரகமேபெற்ற பேதைநீ மாற்றுயர்ந்து,—வீறு
ம்பொன்னோ டிரும்பொத்த போதினு மேவொப் புறு
மண்ணும், விண்ணுமுண ருங்கருணை நினையமைத் தனி
வித மோர்ந்து கொடியோடும்வா,—ஞறுதோய் சூளிகை
குன்றைநக ராளியுட னம்புலீ யாடவாவே, யருளுருத் தே
பொலி யருண்மொழித் தேவனுட னம்புலீ யாடவாவே

எம்மையினிதாள்பவன் செம்மைமதியோனீயியற்கை
வெண்மைமதியோ, னெற்றைக்கு மிருதண்மை யுடைய
றேவுகொளு மியல்பினு னெங்களையன்,—வெம்மை யு
யவர்களொடு மதிதொறு மதிதொறும் விராயுறவு கொள்
வோனீ, வியக்குமொரு தன்மையோ னெங்களிரு பா
த்தி மெய்ம்மையொரு கால்வளருவாய்,—மும்மையுல க
வொரு காற்றேய்கு வாயினை முயங்காதெர்ர் காலெர்பு
வாய், மொழியுநீ யிலைவயோர்ந்து மாடவா வென்றது கு
க்கருணை காணெஞ் ஞான்று,—மம்மையனை யார்மருவு கு
றைநகராளியுட னம்புலீ யாடவாவே, யருளுருத் தேசு
லி யருண்மொழித் தேவனுட னம்புலீ யாடவாவே. (

குறையுடையூபாம்பொன்றெடுத்துண்டுமிழ்ந்திடக்குலைகுலைந் துழல்வை யெங்கள், கோமான் பெருங்கல்வி யாட்சியை யுணர்ந்துசெங் குருமணிச் சூட்டுமோட்டு,—நிறைவுசெழுதுத்திப்பணுடவிப் பாம்பொன்று நோயுடைய மன்றுளொளு நினையீன்றதொருபாவை யிலகுவே பாரமென நென்னுனைத் தனையு மெண்ணேன்,—முறையினொரு சிறுதூக்கி னெழுபாவையும்புக முடித்தற நிறுத்தானிவன், மொழியெங்க டம்பிரான் வல்லப முணர்ந்திலை கொன்முத்த மாளிகைவானயாழ்,—றைறமணித் திடராய குன்றைநக ராளியுட னம்புலீ யாடவாவே, யருளுருத் தேசுபொலி யருண்மொழித் தேவனுட னம்புலீ யாடவாவே. (௬)

செறிதமிழ்ச் சங்கத்துமுதன்மையோனன்பினைந்தினைபென நவின்றநூலிற், செப்பியவிதிப்படிக்கரிகுழைத்தெழுதுகட் செய்யவாய் வெண்ணகை நலார்,—முறிவுற வணங்குதோ றெருவிடுத லால்வளரு மொய்ம்புபெற் றனையெந்நாளு, மொய்த்தவெரு விடுதலத னல்வளர்த வுழவுதொழின் முயலிவன் காட்டுதொழிலே,—மறிவரிய விந்நன்றி யுள்ளுணர்ந் தனையென்னில் வாராதிருப்பை கொல்லோ, மதியோனெனும்பெயர் குறிப்புறு மற்கவிக மகன்வாதி வாக்கியாவ, வறிவர்கழ கம்பரவு குன்றைநக ராளியுட னம்புலீ யாடவாவே, யருளுருத் தேசுபொலி யருண்மொழித் தேவனுட னம்புலீ யாடவாவே. (௭)

பெருநாவலோவென்னுமுழக்கரு மென்பாற் பிறங்குபயிர் கொடிசெடி யெலாம், பேணுங் கருக்கொள்ள நீயுப கரித்தலுட் பேறு இருந்தா னலன்,—திருநாவ லூரர்சி காழியார் க்கீனறத் திருவாய் மலர்ந்த தொப்பச், செயிர்கொ ணின் கூனொழிப் பான்வாய் மலர்ந்துகூன் செய்யுளினு முறவைத்திலா,—னொருநாவ லோடுபெயர் பெறும்பொலத்தினுமருமை

புறநகரில் புராணத்திறே, ரொப்பிலாவெங்கள்பெருமானட்பு மதிநிற் குயிர்க்குறுதி செய்வதாகு,—மருநாவ லோர்புரவு குன்றைநக ராளியுட னம்புலீ யாட வாவே, யருளுருத்தேசு பொலி யருண்மொழித் தேவனுட னம்புலீ யாடவாவே.(அ)

தலைமயிர் பறித்துமணையிற்பாயுடுத்தூந்தமைத்திரள்கை வைத்து முழலுஞ், சமணர் மதமாய்களங் கம்பரவனீக்கியுய ர்சைவ நிலையெங்கு மாக்கு—நிலையுடைய தம்பிரானின்களங் கம் போக்கி நிகழ்புனிதமே யாக்குவா, னீடுமிதன்மேலுறுதி யென்னைகொ னினக்கின்னு நேரளப் பரிய சான்றோர்,—கலை பலவு மோருருக் கொண்டனைய ரருளுக்கு காதலார் நிற்க வு நின்மேற், கடைக்கணித் தாடவா வென்றழைத் தநுபெ ருங்கருணையே கங்கை யினுமிக்,—கலைமருவு புனல்வளக்கு ன்றைநக ராளியுட னம்புலீ யாடவாவே, யருளுருத் தேசு பொலி யருண்மொழித் தேவனுட னம்புலீ யாடவாவே.(கூ)

காதலொடு வாவென் றழைத்தவுடன் வந்திலான் கருதி யதென் னென்று சற்றே, களுக்கச் சிவத்தல்கூ டாதுநாண் பூண்டான் களங்கத் திறத்தி னென்று,—போதலுற யாம்புக ன் றேமினி முனிந்திடிற் போக்குவே றில்லையாகும், புன் மையானிவனென்றொர் கவிகூறின் முக்கட் புராதனனு மு னைவெறுப்பன்,—வீதலுற லேயன்றி வேறொன்று முள்ளது கொல் விளைகுவ தனைத்து மோர்ந்து, மேயினேன் மேயினே னென்றடையினலமுண்டு மேலுலகவாழ்க்கையோர்மிக்,— காதலுற விழைதருங் குன்றைநக ராளியுட னம்புலீ யாட வாவே, யருளுருத் தேசுபொலி யருண்மொழித் தேவனுட னம்புலீ யாடவாவே. (௧0)

அம்புலிப்பருவம் முற்றிற்று.

---

## சிற்றிற் பருவம்.

வாருந் திருவீ தியிஞேர்சார் வண்ணித் திலங்கள் கொடு
மூயன்று, வகுக்குந் திறத்தே யறிவுசெலு மாண்பானினது
வரவுணரா,—தாரு மிருக்கை யெழா திருமிதோ மறிந்து தரு
க்கியிருந்திலமா, லண்ண லிதுட் கொண்டுபகை யமையா
பாராட்டுதலழகோ,—வோரும் புகழ்க்கற்பகத்தளிக ளொரு
ங்கு மொய்ப்ப தெவனென்றே, யும்பர் நடுங்கி நிலேகுலேயா
வொருவேற்றுமையு முணர்வரிதாச்,—சேரும் பொழிற்றண்
டகநாடா சிறியேஞ் சிற்றில் சிதையேலே, செல்வஞ் செருக்
கு குன்றையருட் செல்வா சிற்றில் சிதையேலே, (க)

ஒழிக்குந் திறத்தி னருகந்த னுறையாஞின்ற பாழிகொ
லவ், வுருவ ரமரும் பள்ளிகொன்மற் றுள்ளாராய பரசமையா
ர்,—பழிக்கும் படிவா ழிருக்கைகொலியாம் பாங்கிற்புரிசிச்
சிறுவீடு, பத்திற் சிதைத்தால் வருகின்ற பயன்புண்ணியா
மோ புகழ்கொல்லோ,—கழிக்குஞ் செலவிற் பாலிநதி சுரந்
து பாயமா லியானைத், தொண்டை யெடுப்பு மறையும்வித்
துவன்றிவளர்ந்து விளை செந்நெல்,—செழிக்கும் வயற் றண்
டகநாடா சிறியேஞ் சிற்றில் சிதையேலே, செல்வஞ் செரு
க்கு குன்றையருட் செல்வா சிற்றில் சிதையேலே. (உ)

வெய்ய வமையும் பரசமைய விருப்பஞ் சுமந்த திருவில்
லார், விளையைச் சிதைத்தி யவர்மாயை வியச் சிதைத்தி யாண
வமு,—நையச் சிதைத்தி யிவைசிதைத்தா னும்புகழ் புண்
ணிய மிரண்டு, நானு நினக்கு மேன்மேலா நகையா மெங்கள்

செயல்சிதைத்தல்,—வையம் வியக்குஞ் செங்கரும்புவாழை க்குலையும் பசுங்கமுகும், வயங்கு மிளநீ ரிலாங்கலியு மகவா னவைக்கோ ரலங்காரஞ்,—செய்யவுயர் தண்டகநாடா சி றியேஞ் சிற்றில் சிதையேலே, செல்வஞ் செருக்கு குன்றை யருட் செல்வாசிற்றில் சிதையேலே. (௯)

பொருந்து நிலத்தே ராலுழுதல் புகழாம் விதியு மது வாகும், பொருந்தா நிலங்கா லாலுழுதல் புகன்ற விரண்டு ளொன்றோ,—வருந்து மரிய திருவடியு மண்டுபுழுதி யடை யுநம், மலர்தோய் பவைமற் றிதுதோய்தல் வழக்கோ கண் டார் சகிப்பாரோ,—முருந்து முறுவன் மடமாதர் முயங்கும் பொழில்வாய்க் கருஞ்சுரும்பர், முரலாநின்ற பண்கேட்டும் சுந்துகொடுக்கும் பொற்காசிற், செருந்து மலர்தண் டகநா டா சிறியேஞ்சிற்றில் சிதையேலே, செல்வஞ் செருக்கு கு ன்றையருட் செல்வாசிற்றில் சிதையேலே. (௰)

உற்றூர் சகியார் புனலாட்ட வரியார் பலரு மடிக்கடி யில், வொல்லாப் புழுதி தோய்வெவனென் றுரைப்பார் தவ ஞ்செய்தருமருந்திற்,—பெற்றூர் செவியோ ரினும்பதைப்பா ர் பிறங்கக்காணி லென்படுவார், பேசா வருமை பாராட்டிப் பேணியெடுப்பா ரையுஞ்சினப்பார்,—கற்றூரரிய நூல்பலவு ங் கண்டார் விளங்க நூலினுரை, கரைந்தார் வரைந்து சிவன டியிற் கலந்தார் கடிந்து பரசமையஞ்,—செற்றூர் செறிதண் டகநாடா சிறியேஞ்சிற்றில் சிதையேலே, செல்வஞ் செருக் கு குன்றையருட் செல்வாசிற்றில் சிதையேலே. (௧௧)

தாங்கும்வளவ னனபாயன் றன்கண் மணியா யவனமை ச்சர், தங்கள் சூளாமணியாயுத் தமச்சோ ழப்பல் லவனெனு ம்பேர்.—ரோங்கும் படிகொள் விண்மணியா யுவக்குமடியார் சரித்திரமுந், றுரைசெய் தருள்சிந் தாமணியா யுயர்வுபூணி லிளம்பருவ,—வாங்கும் பிறைநன் னுதலார்செய் வண்டல் சிதைக்க வேண்டுவதோ, வாழைக் குருத்து மதிநடுப்போய் மாரன் குடைக்கோர் காம்பாகித்,—தேங்குந் திருத்தண்டக நாடா சிறியேஞ் சிற்றில் சிதையேலே, செல்வஞ் செருக்கு குன்றையருட் செல்வா சிற்றில் சிதையேலே. (௬)

ஏதமகல வளவன்முனை மேற்று குடிக ளொருநாற்பத் தெண்ணு யிரத்து ளொருகுடியென் றியம்பே மபய னமாத் தியருட்,—போத மருவு மொருவ னெனப் புகலேம் புராண ஞ்செய்தாருட், பொலியு மொருவ னெனநவிலேம் புகலின் மூவருளுமொருவ,—னுதமநன்ற பரமனென நவிலி னடைவ தடையுமென, நன்று தெரிந்தே மெங்கள்செய னயவா திருக் குந் திறமென்னே,—சீத வளத்தண் டகநாடா சிறியேஞ் சி ற்றில் சிதையேலே, செல்வஞ் செருக்கு குன்றையருட் செ ல்வாசிற்றில் சிதையேலே. (எ)

பொன்னஞ் சிலம்பு புலம்படிமன் பொருந்தித் துளையு ம் விழைவடையிற், பொலியும் பரவ லுபநிடதம் புகறல் கே ட்டு நீரொருவு,—முன்னங் கொள்சிற் சிலர்நுதலின் முயங்கி ப்படிந்த மண்டோய்ந்து, முருங்கத் துளைதல் கூடிடினம் மோகமவர்நீத் துய்வாரே, கன்னங் கரிய கடாப்பாய்ந்து காம

ர்பொய்கை நீர்கலக்கல், கழிந்தோட்டெடுக்க வராலெழுந்து டுகமோதப் பலவுதிருந்.—தென்னம் பழத்தண்டகநாடா சிறியேஞ் சிற்றில் சிதையேலே, செல்வஞ் செருக்கு குன்றை யருட் செல்வா சிற்றில் சிதையேலே. (அ)

மாறுபடு மன்னவரெனினும் வளவன் கழற்கா றொழி னவர்வாழ், மணிமாளிகைகண்மிக் குயரு மாறுவிடுப்பாய் ம றைபோர்முற், கூறுபடு நம்பரனடியார் குறிப்புள்ளுணர்ந்து கெடுவானுங், குறுகநீமிர் மாடங்கள்பல குயிற்றிக்கொடுத் துக்குடியமைப்பாய்,—வேறுபடு மாறியாம் வகுத்தவீட்டை விடுத்துச்செலின்வரலென், வேழக்கரும்பின் சாறேடி விரித் த கரம்பும் பாய்ந்துகுழை,—சேறுபடு தண்டகநாடா சிறி யேஞ் சிற்றில் சிதையேலே, செல்வஞ் செருக்கு குன்றைய ருட் செல்வா சிற்றில் சிதையேலே. (கூ)

அலைக்கும் புனல்சூழம்பலத்தி லாடும் பெருமானருள் பெற்று, லவன்செய் தொழிலோரைந்தனுடு வமைந்ததொ ழிலோ மேற்கோட,—னிலைக்குங் கடையென் றொழித்தனே யோநினையா நிற்கு மனுக்கிரக, நீயே யதுசெய் யாவிடினெந் நிரப்பு நீக்கு பவரியாரே,—மலைக்கும்பிறவிப் பிணிமருந்தே வாழ்த்துவார்சிந் தாமணியே, வயங்குஞ்சைவப் பெருவாழ் வே மாறாக் கருணைமாக் கடலே,—சிலைக்குந்தமிழ்த் தண்டக நாடாசிறியேஞ் சிற்றில் சிதையேலே, செல்வஞ் செருக்கு குன்றையருட்செல்வா சிற்றில் சிதையேலே. (க0)

சிற்றிற்பருவம் முற்றிற்று.

---

## சிறுபறைப் பருவம்.

ஆயபர சமையக் கருங்கடா யானைக் கரிக்குருளை வாய் முழக்கு, மரும்புகழ்ச் சைவப் பசும்பயிர்க் குலகுரு மாழியுண்புயன் முழக்கும்,—பாயபிடி யாளருக் களவில்பொன் செறி செய்த பண்டார வாய்திறந்து, பலவுங் கவர்ந்திடுமி னெனறெறித் திடுகொடைப் பயன்முரசி னெழுமுழக்கு,—நேய மிகு வளவர் பெருமாற்காகவப்பாரி னோர்ந்ததன் படையெழுப்பு,—நிலாம்பணை முழக்குமா கக்குணின் மலர்க்கை கொடு நிகழ்பாலி வளனுணர்ந்து,—தேயமுழு தும்பரவு துண்டீர வளநாட சிறுபறை முழக்கியருளே,—தென்றலங் கன்றுலவு மன்றவொண் குன்றைமுனி சிறுபறை முழக்கியருளே. (க)

ஒங்குமுனி வரிருவர் கைகுவித் தரமுழக் குறவெழுப் பிக்களிக்க, வுலகமுழு தீன்றசிவ காமவல் லித்தாயுலோசனம் விடுத்துநிற்கப்,—பாங்குபுனை செம்பொனம் பலநடனா விழும்வரஞ்சோதி மதுவொழுக்கும், பச்சைத் துழாயண்ணன் மத்தள முழக்கினும் பரவுபே ருவகை பூப்ப,— வாங்குதிரை யாற்பாலி வீசுசெம் மணியும் வெள் வயிரமுங் கரைவிராவ, வண்படுகர்மேயும்வளை கோட்டெருமை யதுகண்டுவாய்வே ரிஇயோட் டெடுக்கும்,—தேங்குதிரு வம்பரவு துண்டீரவள நாட சிறுபறை முழக்கியருளே,—தென்றலங்கன் றுலவு மன்றவொண் குன்றைமுனி சிறுபறை முழக்கியருளே. (உ)

புகழ்சரியைகிரியையை யனுட்டித்து வருகின்றபுண்ணியப் பேற்றினோர்க்குப், புலரியிற் சிவபிரான் றளியெழுஞ் சங்கமுற்போதரு முழக்காகவு,—மிகழ்வில்சிவ யோகசாதனமரீஇ யம்முறை யியங்குதிறலா ளருக்காங் கெழுகின்ற சங்க

ட கம்பேரியாதியி னிசைப்பெரு முழக்கூரகவு,— மகிழ்கின்ற பாலியாற் றலையெழீஇக் கற்பக மலைத்தோட வதனடிக்க, ணவாய்நின்றகாமதே னுவை நோக்கிநின் றுலமைந்ததிப்பட ரெனகனி, திகழ்கின்ற செல்வமுயர் துண்டீர வளநாட சிறுபறை முழக்கி யருளே,—தென்றலங் கன்றுலவு மன்ற வெண்குன்றைமுனி சிறுபறை முழக்கியருளே. (ங)

ஆன்றசிவ புண்ணியமுழக்கமும் பற்பலவராயவடியவர் தம்வரலா,றாகிய சரித்திர முழக்கமுந் தெய்வமண மகலாத தமிழ்முழக்கு,மேன்றபலவறமுழக் கமுமிணை யிலாதாயவினி யதிரு வருண்முழக்கு, மெய்ஞ்ஞதற் கரிதாஞ் சிவானுபோகப் பே ரிரும்பெரு முழக்குமான,—மான்றமைங்கமுகம் பொழி ற்றலைத் தவிர்செய்ய மதுவகிறை தேத்தடைக்கண், வான்பி றைக்கோடுதற் கவரின னெனக்கிள வாவிகுள மோடையெ ங்குந், தேன்றவழ வதுவிமூந் துண்டீர வளநாட சிறுபறை முழக்கி யருளே,—தென்றலங் கன்றுலவு மன்றவெண்குன் றைமுனி சிறுபறை முழக்கியருளே. (ச)

வில்லூருமணிமோலி வளவர்பெருமான்பொளடி வீழா தமருவலர்க்கும், வெண்ணீறு கண்மணி புனைந்தைந் தெழுத் தெண்ணு வீணராஞ் சமையருக்கு,—மெல்லூரு மொண்சிவ மணங்கமழ்த வில்லா திளைந்தசிந் தாமணிமுத, லெந்நூற் குநெய்தலம் பறைமுழக் கேயாக வெல்லொளி மழுக்குமே னிச்,— சொல்லூரு மெம்பிரான் பெருமதம் பொழிமண் டுமிர்ங்கைமா வியானை தந்த, தோற்போர்வை போர்த்தென த்தென்றல்வக் துலவவழ றோற்றுதேமாஞ் சோலைமேற்,— செல்லூரு மேன்மையமை துண்டீர வளநாட சிறுபறைமு

மூக்கு யருளே, தென்றலங் கன்றுலவு மன்றவொண் குன்றை
முனி சிறுபறை முழக்கி யருளே. (ரு)

வேறு.

மதிருந்தரமற வின்பாலளவிப் பிழிசுவை மதுவிரவிப்
பிறங்கியபுல்ல கண்டநிறீஇச்சுவை பெறுங் கண்டுங்கூட்டி
யெதிரும் பொருளில்பலாக்கனி மாங்கனி யினைவாழைக்கனி
முனியையு முழுக்கனி முந்திரிகைக்கனி யிவ்விரதமுநாட்டி
யதிருங்கட லமிர் தமுமுளுறுத்தி யவாங்குழல் வீணையினிசை
யத்தனை யும்புக வைத்துச் சிவமண முகலா தேகமழ
முதிரு மருட்கவி பாடிய புலவன் முழக்குக சிறுபறையே
முழுமணி மாடக் குன்றத்தூரன் முழக்குக சிறுபறையே.

அத்தி தருங்கவி யென்மருநன்று வறைகுதி ரம்மட்டோ
வவாவிய புத்தி தருங்கவி யென்மரு மதுமட் டோவின்னுஞ்
சித்தி தருங்கவி யென்மரு மெல்லாத் தீர்த்தங் களுமுறுமா
செய்யாச் சுத்தி தருங்கவி யென்மருஞ்செப்பிய வம்மட்டோ
பத்தி தருங்கவி யென்மருமாகிப் பாரிற் புலவரெலாம்
பல்லா றோதுபு பாராட்டக் கதிபற்றிய பல்லோர்க்கு
முத்தி தருங்கவி பாடிய புலவன் முழக்குக சிறுபறையே
முழுமணி மாடக் குன்றத்தூரன் முழக்குக சிறுபறையே.

கனிவி லெமைப்பொரு வார்களுநெஞ்சு கரைந்துகரை ந்துருகக், காம்ரு பத்தியும் வயிராக்கியமுங் கவினக் குதிகொள்ளத்,—தனிவில்பொன்மேரு வெனக்கொடு திரிபுர தகனும் புரிபெருமான், நயங்குபொ னம்பல நின்றுபல்லோரஞ் சவிசெய நடனவில,—கனிவி லிடும்புகழ் மிகுசம்பந்தரு நாவுக் கிறையவரு, காவலர் கோவுஞ் சிரகர கம்பித நன்கு புரிந்த

ருள,—முனிவி றமிழ்க்கவி பாடிய புலவன் முழக்குக சிறு
றையே, முழுமணி மாடக் குன்றத்தூரன் முழக்குக சிறுப
றையே. (அ)

நந்துபுராணமெவ் வளவா யிற்றென நாடுறு மனபாய,
னகை மகிழ்பூப்ப மணிக்காலாயிர நண்ணியமண்டபவாய்,—
வந்து விராவு மிடத்தி னமர்ந்து வயங்குரு கையேட்டின்,
மாண்பார் கண்டங் கொண்டங் கெழுதுனர் மாறு தேயெழு
தப்,—பிந்துவரைந்த வெழுத்துனு மொன்றும் பெயரா தக்
கரமாம், பெயர்ப்பொரு டேற்றுபு நிலைபெற யார்க்கும் பெட்
கும் விருப்பமெழ,—முந்து தமிழ்க்கவி பாடிய புலவன் முழ
க்குக சிறுபறையே, முழுமணி மாடக் குன்றத்தூரன் மு
ழக்குக சிறுபறையே. (௯)

தங்கு தமக்கெதிர் நின்றுளமுருகத் தரிசித்திடுவோவன்
றன்செவி பரிசன ரஞ்செவி மறையவர் தஞ்செவி யுங்கே
ட்க,—வெங்கு மளாம்புக ழிச்சே வையர்கோன் யாமேழுத
னல்க, வெம்மடி யார்வர லாறுமுழக்க விளிக்கப் பாடினை
றற்,—பொங்கு விருப்பிற் கேட்குகவென்னைப்பொன்னம்பல
வாணர், பொலிதிரு வாக்கடி ஞெகிழியி னொலியொடு பெ
றப வெழுப்பவருள,— முங்கு தமிழ்க்கவி பாடிய புலவன்
முழக்குக சிறுபறையே, முழுமணிமாடக் குன்றத்தூரன்
முழக்குக சிறுபறையே. (௧௦

சிறுபறைப்பருவம் முற்றிற்று.

---

## சிறுதேர்ப் பருவம்.

மருவாப் நறுந்தாத சித்தொங்கல்வளவர்கோமகனுடன
வர்திருகையு, மணிக்கவரி வாங்கிவீ சக்கற்பகப்பூ மகிழ்ந்த

வானுடர் தூற்றப்,—பெருவாய்திறந்துபட கம்பேரிமுதலா ம் பெரும்பணை யெலாமுழங்கப், பிறங்குமூ வாயிரவர் முத லியோர் மறையொலி பிறங்கத் தொடர்ந்து போதக்,— கரு வாயுறுமற்றை யாருந்தலைக்குமேற் கைகுவித் தேத்திமேவக், —கருதும்புராண முடிவிற்குஞ்சரத் * திலகடத்திவர்ந்தோ ங்குதில்லைத்,—தெருவா யுலாப்போது சேவையர்குலாதிபன் சிறுதேருருட்டியருளே, சிறுகோலெடுத்தரசு செங்கோனி றுத்தினோன் சிறுதே ருருட்டியருளே. (௧)

முறியுமல ரும்பொருவு திருமேனி யுமையம்மைமுவுல குயத்தழுவுபு, மூரிப் புனற்கம்பை யெம்பிரான் திருமேனி முற்றுங்குழைத்தனான்றி,—லறியும் வகையற மெலாம்பொ லியவிருநாழி நெல்லளந்தப் பிரான்கொடுக்க, வனையமா தே வியேற் றேற்றகை யுயிர்த்தமகளா னுயிர்த்தோர்களேகன்— னெறியுநல லும்பெருக வளரெனல் குறித்தவர்கை நீட்டப் பணிந்து வாங்கி, நீடுங்கொழுக்கொடுதம் மனையுதவியான னி நிரம்பப் பெருக்கு குடியுட்,—செறியு மொருகுடியாயசே வையர் குலாதிபன் சிறுதே ருருட்டியருளே, சிறுகோலெடு த்தரசு செங்கோ னிறுத்தினோன் சிறுதேருருட்டியருளே. ()

வெருவப் பகைக்கடல் சுவற்றழ லரும்புகண் விரைத்தா தகித் தொடையலான், வீச வீசப்பெற்று வாம்பரி யுகைத்து மிளிர் வெங்கடாக் களிறுகைத்து,—முருவக் கதிர்த்தரள மாலைகால்யாத்திட்ட வொள்ளொளிய யானைமூர்ந்து, மொரு கம்பியாரூரனைப் புகலியாண்ட கையை யொப்பாயி னைய தான்று,—மருவப்பொலிந்த மட்டேரூரின் முதலடி மரீஇய

* இலகடம்=யானைமேற்றவிசு

விருவரு ளொருவரு, மானுவாய்வையகூமெடுத்தேத்த நில
புனல் வயங்குமுருணி நிகர்த்த,— திருவப்பெருக்கினை
சேவையர்குலாதிபன் சிறுதேருருட்டியருளே, சிறுகோ
டுத்தரசு செங்கோனிறுத்தினோன் சிறுதேருருட்டியருே

வசைதவிர்வினைத்திட்பம் வாய்க்தாகவப்பாரின் மாற்
ரெதிர்ந்தகாலை, மழைமதக்களியானை வாம்பரிசயந்தனமு
மற்றுளவருதினியெலா,—மசைவில்பல் படைக்கலங்கொ
நூழி லாட்டுபுப லாறு யெழுந்தநெய்த்தோ, ரவ்வணிகவழ
ழுத்தோடியுவாரழிபுக் களவிறிடர் செய்யநோக்கி,—யின
மலரலங்கலொடு வாகையுஞ்சூடியா ரெய்தப்புனைந்த ெ
ருமா, னிரும்புலியைமேருமுடி யேற்றிப்பெருந்தே ரிண
குறவுநட்டிநேமி,— திசைதிசையுருட்டிடச் சேவையர்குல
திபன் சிறுதேருருட்டியருளே,—சிறுகோலெடுத்தரசு செ
கோனிறுத்தினோன் சிறுதேருருட்டியருளே. (ச

சாதகப்பறவைக் கிரும்புயற்றுளியுஞ் சகோரத்தினு
குதிக்குஞ், சந்திரன்விடுங்கரமுமம்புயத்திற்கெழு தாம்பரி
தேரிரவியு,—மேதகவுறுந்தவத்திற்கருளுமவ்வருள்விளக்க
தினுக்குழுவலு, மேவருங்கல்விக்கு நுண்ணறிவுநுண்ணறி
வீக்கத்தினுக்கொழுக்கு,— நோதகவிலாதமைந் தாங்கரு
வழிச்செலீஇநோய்ப் பிறவிபோக்குவார்க்கு, நோற்றவ
புராணமில்லாதமைதராதா நுவன்றெம்மை யாண்டபெ
மான்,— றீதகமதித்திடாச் சேவையர்குலாதிபன் சிறுதே
ருருட்டியருளே, சிறுகோலெடுத்தரசு செங்கோனிறுத்
தோன் சிறுதேருருட்டியருளே. (ரு

எய்குன்றவார்சிலைப் பெருமானுளத்துவகை யெய்தப
றையோர்கள்குழுமி, யிசையவுபகரணமெல் லாந்தகச்சேர்

தினிய தென்னுமொருதேத்தமர்ந்து, — பொய்குன்ற யாகக் குண்டத்தழலெழுப்ப மேற்போயபூம்புகைவானெடு, பொலி யுமூச்சைச்சிரவ மயிராவதந்தான் பொறுத்தநிறமேவச்செ ய,—மெய்குன்றவந்தவா றென்னெனக்கற்பகம் வெதும்பப் புரிந்துபின்னும், விண்ணோடடங்கவுநண்ணுவரம்பையர் விழித் துணை யொருங்கிமைப்பச்,—செய்குன்றையம்பதிச் சேவை யர்குலாதிபன் சிறுதேருருட்டியருளே, சிறுகோலெடுத்தாசு செங்கோனிறுத்தினோன் சிறுதேருருட்டியருளே. (சா)

புழுங்குங்கதிர்ப்பரிதி யெழமுறுக்குடைமுகப் புண்ட ரீகத்தடத்துப், பொலிதரச்சூழ்ந்துநிற் கின்றதருவிடபமலர் பொழிமது முழுக்கவீழ்ந்தே,—யெழுங்குங்குமத்தோளிணை ந்தழலை யார்களுனவிரதமன் றென்றுநீங்க, வெறிதிரைகொ ழிங்காலை யளவிலாதிமமாங்க னெய்திப்படிந்துதுளையா,— வழுங்குந்தரத்தவாய் மேலெழுமுன்னீங்கியோ ராசமுழுவது நனைந்தே, யருமைவெண்முகில்செய்ய தேன்பொழிதலென வியந் தாகாயநோக்கிநிற்குஞ், — செழுங்குன்றை யம்பதிச் சேவையர்குலாதிபன் சிறுதேருருட்டியருளே, சிறுகோலெ டுத்தாசு செங்கோனிறுத்தினோன் சிறுதேருருட்டியருளே.

வெங்கடியவாணவமலக்குருட்டிருளுளம்வெரீஇப்பதறி யோட்டெடுக்கும், வெண்ணீறுசாதனம் விழைந்தவர்தமுக கமல மேவுந்தெருருங்குமலரும்,—பங்கமுறமேவுபரசமையர் வாயாம்பல்பல வுந்துயரமைந்துகுவியும், பரவுவேதாகமபுரா ணமெனு மங்கலப்பணைமிக்கெழுந்தொலிக்கு,— மங்கலழு மாதாரருடலினெறிந்த குழையன்றித்தடப்பாரில, ரவைக ளையுமகலுறவகற்றினே மண்ணகத்தமையவெழுகின்றதாய, செங்கதிரெனச்சொலச் சேவையர்குலாதிபன் சிறுதேருரு ட்டியருளே, சிறுகோலெடுத்தாசு செங்கோனிறுத்தினோன் சிறுதேருருட்டியருளே. (அ)

சுவையமையுமோதகங் கனிபலவுமுற்றவுந் தம்பிமுன்வற்குநல்கித், தொழவமுதுசெய்தலா னூறென்பதிந்நகர்சூழ்நகரினும்புகாது,—நவையற்றடியர்தென்னி லச்சமுந்தல்வலியவே நவிலவேண்டுவதினியெவ, னன்னுதற்றிருநீறுநிலவெறிக்கக்குழை நலங்கொண்மணிவெயிலெறிக்க,— வளைவயகம்வியக்கமுப் புலவாருண்முக்கனி யருந்தமிழ்ச்சுவையனைத்து,மாராய்ந்தெடுத்துப்பல் செய்புண்முகமாவறிய வறிவித்தபெருநாவலன்,—சிவையுதவுசொற்கொண்ட சேவையர்குலாதிபன் சிறுதேருருட்டியருளே, சிறுகோலெடுத்தரசு செங்கோனிறுத்தினோன் சிறுதேருருட்டியருளே. (௯)

பண்புகெழுநின் சரித்திரமினிய பாவாற்பரப்பியதிருக்கைலாய, பரம்பரையுமாபதி சிவன்புகழுமவன்முன்னோர் னைபம்புகழுமவன்வழிவரு,— நண்புபுனைதவர்புகழு மினிமேலும்வருபவர் நயப்புகழுநீடுவாழ, நாடுவிதநீசெய்த மாபுராணத்தமரு நாயன்மார் பெருமைவாழ,—விண்புகழுநால்வர் திருவாய்மலர்ந்தருடிரா விடவேதமென்றும்வாழ, மெய்யன்பினின்று லயப்பணிமுதற்புரி விருப்பமிக்கார்கள் வாழ்க,—திண்புவியெடுத்தேத்து சேவையர்குலாதிபன் சிறுதேருருட்டியருளே, சிறுகோலெடுத்தரசு செங்கோனிறுத்தினோன் சிறுதேருருட்டியருளே. (௧௦)

சிறுதேர்ப்பருவம் முற்றிற்று.

---

## சேக்கிழார்சுவாமிகள் பிள்ளைத்தமிழ்
## முற்றுப்பெற்றது.